

# 19

# நாளைக்கு மட்டும்

சண்முகம் தையற்கடை முதலில் கடைத்தெரு சந்தடிக்கு அப்பாற்பட்ட, இன்னும் நகர வசதிகள் யாதும் முழுதாகப் பெறாத ஒரு சிறு குடியிருப்புப் பகுதியின் கோடியில் இருப்பதாகத்தான் தொடங்கியது. அவன் கடை வைத்த அடுத்த ஆண்டு அவன் கடையை அடுத்து இருந்த வெற்றிடம் ஒரு பெரிய சாலையாக மாறி நிறைய வண்டிகளும் லாரிகளும் போகும் இடமாக மாறியது. சாலை வந்தவுடன் விரைவில் நிறைய வீடுகள் வரத் தொடங்கின. அந்த வீடுகள் இன்னும் நிறைய வீடுகளுக்கும் தெருக்களுக்கும் வழி வகுத்தன. அப்புறம் பஸ்களும் அந்தச் சாலை வழியாகப் போகத் தொடங்கின. ஒரு நாள் அவன் கடைக்குச் சற்றுத் தள்ளி ஒரு கம்பத்தை நட்டு ஒரு சிறு பஸ் நிலையமே அமைக்கப்பட்டு விட்டது. அங்கிருந்து கிளம்பிய இரு பஸ்கள் ஊருக்கு வெளியே புதிதாக ஆரம்பித்த கல்லூரிக்குப் போவதாக இருந்தன. கல்லூரி மாணவர்கள் பஸ் நிலையக் கம்பம் அருகே காத்து நிற்பதற்குப் பதில் சண்முகம் கடை வாசலில் நிற்பதை சுவாரஸ்யம் மி குந்ததாகக் கண்டு கொண்டனர். கிரிக்கெட்டும் சினிமாவும் அரசியலும் காரசாரமாக விவாதிக்கப்பட்டன. சண்முகம் கடைக்குப் பக்கத்தில் வெற்றிலை பாக்குக் கடை, டீக்கடை, வேர்க்கடலைக் கடை எனப் பல கடைகள் கிளம்பி எல்லாரும் வளர்முகமாக இருந்தனர். சண்முகம் கடை அதற்குரிய எல்லைக்குள், இருபதாம் நூற்றாண்டின் ஜனநாயக உணர்வின் சின்னமாக ஒரு கல்வி கேளிக்கை கலாச்சாரக் கருத்துப் பரிமாறல் கேந்திரமாக மாறிவிட்டிருந்தது.

நாராயணன் சற்று முன்பே மீசை சரி பார்க்கப்பட்ட மேலு தட்டைத் தடவிய வண்ணம் சண்முகம் கடை முன்னால் நின்று கொண்டிருந்தான். சண்முகத்தின் தம்பி ரத்தினம் இரு பெரிய பூட்டுகளைத் திறந்து கடையின் உருளைக் கதவை மேலெழுப்பிய வுடன் நாராயணன் கடைக்குள் ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி



வைக்கப்பட்ட இரு பெஞ்சுகளையும், இரு இரும்பு முக்காலி களையும் வெளியே எடுத்துப் போட்டான். இரு முக்காலிகளைக் கடையை ஒட்டியபடி நடைபாதையில் போட்டு அதன் மேல் ஒரு நீண்ட பலகையை வைத்ததில் கடை இரண்டடி பரிமாணம் கூடியது. ரத்தினமும் நாராயணனுமாக ஒரு குட்டையான கண்ணாடி அலமாரியைப் பாதி கடையிலும் பாதி பலகை மீதும் இருப்பதாக நகர்த்தினார்கள். ரத்தினம் ஒரு பானை எடுத்துத் தண்ணீர் பிடித்து வர அடுத்த வீட்டிற்குப் போனான். நாராயணன் வெற்றிலை பாக்குக் கடையிலிருந்து ஒரு சிகரெட்டை வாங்கிப் பற்ற வைத்துக் கொண்டான். அந்தத் தனிமை இன்பம் இன்னும் அரை மணிகூட நீடிக்காது. சங்கர், பாலமுருகன், பெரிய ரவி, குள்ள ரவி, தமிழரசன், பாஸ்கர், சிங்காரம், மாரியப்பன், வேணு, குரேஷி, ராகவாச்சாரி இன்னும் பலர் ஒன்பது மணிக்குள் வந்து குவிந்து விடுவார்கள்.

ரத்தினம் தண்ணீர் கொண்டு வந்து வைத்துவிட்டு மீண்டும் வெளியே போய்விட்டான். நாராயணன் பெஞ்சுகளை நகர்த்தி ஒழுங்குபடுத்தினான். அப்போது துடப்பத்துடன் சரோஜா வந்தாள். அவளுக்கு வயது ஐம்பதிலிருந்து நூறுவரை சொல்லலாம். நாராயணனைத் தாண்டிக் கடையினுள் புகுந்து பெருக்கத் தொடங்கினாள். நாராயணன் "பார்த்துப் பெருக்கு, ஷர்ட்டுக்கு வைச்சிருக்கிற பை, கை எதையாவது தூக்கிக் குப்பையில் போட்டுடப் போறே" என்றான்.

"நீதான் பாத்துப்போடு" என்று சரோஜா சொன்னாள். அவள் பெருக்கி வந்த ஒரு குவியல் துண்டுத் துணிகளை நாராயணன் ஒருமுறை கலைத்துப் பார்த்தான். பொறுக்கி எடுத்து வைக்க ஐந்தாறு பொத்தான்கள்தான் கிடைத்தன.

"ஏன் ஐயா, நீ ஒண்ணும் வேலைக்கு போகலியா?" என்று சரோஜா கேட்டாள்.

"போகலாம் போகலாம்" என்று நாராயணன் சொன்னான்.

"வடிவேலு வடக்கே எங்கேயோ போறாராம், தெரியு மில்லே?"

"அப்படியா? தெரியாதே."

"இன்னிக்குப் போறாராம். நேத்திக்கு அவர்தான் காபிக்கு பணம் கொடுத்தாரு."

"என்கிட்டே சொல்லலியே."

"இன்னிக்கு நீதான் ஒரு எட்டணா கொடு, ஐயரே."

நாராயணன் அவனுடைய சட்டைப் பையைத் துழாவிப் பார்த்தான். அன்று முழுக்கச் செலவுக்கு அவனிடம் அவ்வளவு தான் சில்லறை இருக்கும்.

"எங்கிட்டே இல்லை, ஆயா. ரத்தினம் வந்தவுடன் கேட்டுத் தரேன்."

"அவரைக் கேக்க நீ என்ன சிபாரிசு?" சரோஜா போய் விட்டாள்.

பஸ் கம்பத்தருகில் கல்லூரி முதல் பஸ்ஸுக்குச் சிறிது சிறிதாகக் கூட்டம் சேர ஆரம்பித்தது. ஒருவன் நாராயணனைப் பார்த்து, "நாராயணன்!" என்று கூப்பிட்டான்.

"என்ன?" என்று நின்றவிடத்திலிருந்தே நாராயணன் குரல் கொடுத்தான்.

"வெக்டர் அனாலிசிஸ் கொண்டு வந்தாயா?"

"மறந்துட்டேம்மா. நாளைக்குத் தரேன்."

"நேத்திக்கும் மறந்துட்டேன்னுதான் சொன்னே."

"வீட்டுக்கு வாயேன். எடுத்து வைச்சிருக்கேன்."

"வீட்டிலே நீ எப்போப்பா இருக்கே! நாலு தடவை வந்துட்டேன், தெரியுமா?"

"சாரி, பிரதர். நாளைக்குக் கட்டாயம் கொண்டு வரேன்."

சடாரென்று நாராயணன் சிகரெட்டைக் கீழே போட்டு மிதித்தான். அவனுடைய அப்பா அந்தப் பக்கம் வந்து கொண்டி ருந்தார். நாராயணன் பஸ்ஸுக்குக் காத்திருப்பவர்கள் மத்தி யில் ஒளிந்து கொள்ளப் பார்த்தான். தையற் கடையில் வேறு யாருமே இல்லாததால் கால் தயங்கியது. அப்பா அவனைப் பார்த்துவிட்டார்.

"ஏண்டா, இங்கேயா நின்னுண்டிருக்கே?"

"ஒண்ணுமில்லேப்பா..."

"காலங்கார்த்தாலே கிளம்பி இங்கேதான் காவல் காத்திண் டிருக்கியா? ஏதோ பையன் வீட்டுக்குப் படிக்கப் போயிருக் கான்னா உன் அம்மா சொன்னா?"

'போகணும்பா."



சண்முகம் அப்போது வேகமாக சைக்கிளில் வந்து இறங் கினான். நாராயணனின் அப்பாவைப் பார்த்து, "என்ன வேணும்?" என்று கேட்டான்.

"எங்க அப்பா" என்று நாராயணன் சொன்னான்.

சண்முகம் சைக்கிளை பக்கத்து வீட்டு காம்பவுண்டுக்குள் கொண்டு போய் வைத்துவிட்டுக் கடைக்கு வந்தான். "ரத்தினம் வரலியா?" என்று நாராயணனைக் கேட்டான்.

"வந்துட்டு எங்கேயோ வெளியே போனான்."

"நீங்க போங்க," என்று சண்முகம் சொன்னான்.

நாராயணன் அவன் அப்பாவைத் தொடர்ந்து பஸ் கம்பத்தருகே போனான். அப்பா அவனைக் கவனியாதது போல இருந்தார்.

ஏதோ தேடுவது போல சரோஜா வந்தாள். நாராயணனைப் பார்த்து, "என் வெத்திலைப் பையை எடுத்து வைச்சியா?" என்று கேட்டாள்.

"நான் ஒண்ணும் பாக்கலை, போ!" என்று நாராயணன் குரலை அடக்கி அவசரமாகச் சொன்னான். அப்பா திரும்பிப் பார்த்தார்.

"நீதானே துணியெல்லாம் கலைச்சுப் போட்டே? அங்கதான் விழுந்தது."

"விழுந்தா போய் எடுத்துக்கோயேன். எனக்கென்ன தெரியும்?"

"கோபத்தைப் பாரேன். ஏதோ காப்பித் தண்ணிக்குக் கேட்டா கொடுக்காட்டியும் கோபம் வருது பெரிசா."

நாராயணன் சற்று விலகி நிற்க முயன்றான். சரோஜா சண்முகம் கடைப் பக்கம் போனாள்.

பஸ் வந்தது. எல்லாரும் இடித்துப் பிடித்து ஏறினார்கள். நாராயணனுடைய அப்பா மட்டும் எந்த முயற்சியும் எடுத்துக் கொள்ளாமல் அப்படியே நின்றார்.

"நீங்க ஏறலியாப்பா?" என்று நாராயணன் கேட்டான்.

"எங்கே போறதுக்கு?"

"நீங்கதானே வந்தேள்?"

அப்பா முகத்தில் தெரிந்த கோபத்தில் அங்கேயே தன்னை அடித்து விடுவாரோ என்றுகூட நாராயணனுக்குப் பயமாக இருந்தது.

"என்கூட வீட்டுக்கு வா."

நாராயணன் சண்முகம் கடைப் பக்கம் பார்த்தான். அங்கு அவனுடைய சகாக்கள் வந்து சேர ஆரம்பித்திருந்தார்கள். பெஞ்சில் நன்றாகச் சுவரில் சாய்ந்து உட்காரக்கூடிய இடத்தில் பாஸ்கர் சுகமாகப் பாக்கு மென்று கொண்டிருந்தான்.

அப்பாவைப் பின் தொடர்ந்து வீட்டுக்குப் போய்க் கொண்டிருக்கையில் பரீட்சையில் தவறவிட்ட பாகங்களுக்கு மீண்டும் எப்போது பணம் கட்ட வேண்டும், எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சில் 'வீட்டுக்கு வா' என்று கூறி அதிகாரியின் வீட்டுக்கு எப்போது போவோம், வீட்டு ரேஷன் அட்டைக்கு அடுத்த தவணை பாமாயில் டின் எப்போது என்று விசாரிப்பது, டேபிள் லைட் ஸ்விட்சை சரி செய்து எலக்ட்ரீஷியனிடமிருந்து வாங்கி வருவது போன்ற விவரங்களுக்குப் பதில் தயாரித்துக் கொண்டிருந்தான். அப்பா வேலையிலிருந்து ஓய்வுபெற இன்னும் மூன்றே வாரங்கள் இருந்தன. அதற்குள் அவனுடைய சர்டிபிகேட்டுகளின் ஒரு கத்தைப் பிரதிகளுக்கு கெஜட் பதிவு பெற்ற அரசாங்க அதிகாரியின் அத்தாட்சிக் கையெழுத்து வாங்கி வரவேண்டும் என்ற விஷயத்தையும் அட்டவணையில் சேர்த்துக் கொண்டான். இவ்வளவும் அவன் கவனத்தில் உள்ளன என்பதை அப்பாவிடம் சொல்லி அவரைச் சமாதானப் படுத்தினால் மறுநாள் ஜாலி ரோவர்ஸ் ஆடப்போகும் கிரிக்கெட் ஆட்டத்தைப் பார்க்க வழி செய்து கொள்ளலாம்.

சாலை நாற்சந்தியைக் கடந்து அடுத்த தெருவில் திரும்பித் தான் அவனுடைய வீட்டுப் பகுதிக்குப் போக வேண்டும். ஆனால் அப்பா தொடர்ந்து நேராகப் போய்க் கொண்டிருந்தார். "இப்போ வீட்டுக்குப் போகலியா?" என்று நாராயணன் கேட்டான். அப்பா கடுமையாக, "பேசாம வா கூட" என்றார். அந்தச் சாலைக் கோடியில் ஒரு பாத்திரக் கடை புதிதாகப் பெரிய அளவில் திறக்கப்பட்டிருந்தது. அப்பா அங்கே உள்ளே நுழைந்தார். வாசலில் இருந்த கொக்கிகளில் வரிசையாக பிளாஸ்டிக் பக்கெட்டுகளை ஒரு பையன் மாட்டிக் கொண்டிருந்தான். நாராயணனின் அப்பாவைப் பார்த்து, "என்ன வேணும்?" என்று கேட்டான்.

"முதலாளி வந்துட்டாரா?"



"என்ன வேணும்? இப்பத்தான் வந்தாரு."

"அவரைப் பாக்கணும்."

"அந்தக் கதவைத் திறந்துண்டு போங்க."

அந்தக் கதவுக்குப் பின்னால் ஒரு சிறு அறை நவநாகரிகமாகக் காட்சியளித்தது. அந்தச் சிறு அறைக்குப் பொருத்தமாகத் தயாரிக்கப்பட்ட மேஜை மீது ஒரே மாதிரி வர்ண அட்டையுள்ள கணக்குப் புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. கூடவே ஒரு புட்டபர்த்தி சாயிபாபா படமும் இருந்தது. நாராயணனையும் அவனுடைய அப்பாவையும் பார்த்த கடை முதலாளி ஒரு நிமிடம் ஒன்றும் பேசாமல் இருந்துவிட்டு, அதற்குப் பிறகு சாயிபாபா படத்தின் அடியில் கையால் தொட்டுக் கண்களை ஒத்திக் கொண்டார். 'சொல்லுங்க" என்றார்.

"நம்ப பையனை அழைச்சிண்டு வந்திருக்கேன்."

முதலாளி நாராயணனை ஒரு முறை கவனமாகப் பார்த்தார். "இடம் பிடிச்சிருக்கா தம்பி?" என்று கேட்டார்.

நாராயணன் ஏதும் விளங்காமல் விழித்துப் பார்த்தான்.

"நீ ஒண்ணும் சாமான் எடுத்து விலை என்ன ஏதுன்னு சொல்ல வேண்டாம். இந்தப் பாத்திரச்சீட்டுக்கு வரவங்க கிட்டே சீட்டுப் பணத்தை வாங்கி அவுங்க அட்டையிலே குறிச்சுத் தரணும். அவுங்களுக்கு ரசீது போட்டுத் தந்துட்டு உடனே இரண்டு கணக்குப் புத்தகங்களிலேயும் குறிச்சிடணும். எல்லாம் பொறுமையாகச் செய்யணும். இடத்தை விட்டுப் போயிடக் கூடாது."

"அதெல்லாம் செய்வான். எங்க வீட்டிலேயே இவனுக்குத் தான் பொறுப்பு எல்லாம் உண்டு."

"போன வாரம் வரைக்கும்கூட ராஜகோபாலய்யர் பையன் இங்கே இருந்தான். பையன் நல்லவன்தான். ரசீது எழுதினா அட்டையிலே குறிக்க மாட்டான். அட்டையிலே குறிச்சா அதைக் கணக்குப் புத்தகத்திலே எழுத மாட்டான். கணக்கு ஒரேயடியா உதைச்சுது. ஐயர் கிட்டேயே சொன்னேன். அவரே அவனை நிறுத்திட்டாரு."

அப்பா நாராயணனைப் பார்த்து, "கேட்டுக்கடா" என்றார். கடை முதலாளியிடம் "அதெல்லாம் ஒழுங்காச் செய்வாங்க. இவ்வளவு நாள் படிக்க வைச்சதுக்கு இது கூடச் செய்யலேன்னா எப்படி?" என்றார்.

'அதாங்க கஷ்டம். இதெல்லாம் இந்த மாதிரிப் பிள்ளை யாண்டான்களுக்கு வேலையாத் தெரியறதில்லை."

"இவன் அப்படியெல்லாம் இல்லை."

"தம்பி பேர் என்ன?"

நாராயணன், "நாராயணன்" என்றான்.

"இன்னிக்கே வந்துடு தம்பி. அம்மாவாசை நிறைஞ்ச நாளா யிருக்கு. பன்னெண்டு வரைக்கும் ராகு காலம். அது முடிஞ்ச வுடனே வந்து உக்காந்துரு. என்ன சரிதானே?"

இப்போது அப்பாவைப் பின் தொடராமல் அவர் பக்கத்திலேயே நாராயணன் நடந்து போனான். படிப்பு பரீட்சை என்று இனிமேலும் காத்திராமல் அப்பா அவனை ஒரு பாத்திரக் கடையில் உட்கார வைத்து விட்டார். ஏதாவது கேட்டால், 'தையற்கடை முன்னாலே நின்னுண்டு அரட்டை அடிக்கறதுக்கு இது ஒண்ணும் மட்டமில்லை' என்று சொல்லிவிடுவார்.

தையற்கடை வாசலில் மாதக் கணக்கில் நின்றதில் எது எப்படி யானாலும் உடைகள் பற்றி நிறையவே அவனுக்குத் தெரிந்திருந்தது. பளபளக்க மொட மொடக்க உடை அணிய மெடிக்கல் ரெப்ரசண்டேடிவ் வேலைக்கு மிஞ்சி எதுவும் இல்லை. கழுத்தில் டையும், கையில் பெரிய கறுப்புப் பையும் தூக்கிப் போகும் இவர்களை மருந்துக் கடைக்காரர்கள் அரை கவனம் அரை இளப்பத்துடன் நடத்துவார்கள். டாக்டர்கள் நெடுநேரம் காக்க வைத்த பிறகுதான் இவர்கள் தரும் வழவழப்புத் தாள்களையும், மாதிரி மருந்துகளையும் வாங்கிக் கொள்வார்கள். காலையெல்லாம் வியர்த்து விறுவிறுக்க இவர்கள் அலைந்தாலும் பகல் சாப்பாட் டிற்குப் பிறகு ஒரு ஏர்கண்டிஷண்ட் சினிமாவில் நாலு ரூபாய் டிக்கெட் வாங்கிக் கொண்டு சுகமாகத் தூங்கலாம். பாங்க், கம்பெனிகள், அரசாங்க அலுவலகம் இவற்றில்கூட பரவாயில்லை. ஆனால் கடை. அதுவும் பாத்திரக்கடை. என்ன உடை போட முடியும்? ஒரு நாலு முழ வேஷ்டியைச் சுற்றிக் கொண்டு போனால் கூட யாரும் ஏன் என்று கேட்கப் போவதில்லை.

நாராயணனுக்கு அப்பா மீது கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. ஒரு எம்.எல்.ஏ. அல்லது பெரிய மனிதரைப் பார்க்கத் தெரியாமல் சாயிபாபா படத்தைக் தொட்டுக் கும்பிடும் கடைக்காரரிடம் அவனை ஒப்படைக்கிறார். நாளெல்லாம் ஐந்து ரூபாய், பத்து ரூபாயாக வாங்கிப் போட்டுக்கொண்டு ரசீது எழுதிக் காலம் தள்ள வேண்டும். பாத்திரச் சீட்டுக் கட்ட வருபவர்களுக்குப் பாரதிராஜாவின் நுணுக்கம் பற்றி என்ன தெரியும்? முழுதாக அரை அங்குலம் கூட நகராமல் அமர்க்களமாக நடனம் ஆடுவது போன்ற தோற்றத்தைத் தரும் அமிதாப்பச்சனின் திறமை பற்றி என்ன தெரியும்? கிரிக்கெட் ஆட்டத்தில் ஒரு கோஷ்டியில் பதினோரு பேர் இருப்பார்கள் என்றாவது இவர்களுக்குத் தெரியுமா? கடைக்காரன் தரும் ஒரு அசட்டு அட்டையை வருட மெல்லாம் பத்திரமாக வைத்துக் கடைசியில் ஒரு தவலையை வாங்கிப் போகத்தான் தெரியும். ஆனால் இந்த வேலைகூடக் கிடைக்காமல்தான் ஒவ்வொரு தையற்கடையிலும், வெற்றிலை பாக்குக் கடையிலும் அவனைப் போல எவ்வளவோ பேர் நின்று வருகிறார்கள். அந்த ராஜகோபாலய்யரின் பிள்ளை இப்போது எங்கே நிற்கிறானோ?



பாத்திரக் கடை வேலைக்குப் போக இவ்வளவு சீக்கிரம் மனம் சமாதானம் அடையக்கூடுமா என்று நாராயணனுக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்தச் சண்முகம் கடை பற்றி அவனுள் எங்கோ ஒரு மூலையில் ஒரு கண்டனம் இருந்திருக்கிறது. இல்லாது போனால் அந்தச் சிரிப்பையும் கும்மாளத்தையும் சுதந்திரத்தையும் உதறிவிட இவ்வளவு எளிதில் முடியாது.

நாளை ஒரு நாளாவது ஜாலி ரோவர்ஸ் ஆட்டத்தைப் பார்த்து வர அந்த சாயிபாபா பக்தர் அனுமதிப்பாரா என்று தெரியவில்லை. கேட்டுப் பார்க்க வேண்டும்.

1984